உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சேலம் தண்டுலமாநகர்

# ஸ்ரீ சௌடேஸ்வரி அம்மன்

# பஜனை கீர்த்தனை.

——:(o):——

இஃது

சேலம் செவ்வாய்ப்பேட்டை

சின்னமுத்துத்தெருவு தேவாங்ககுல

மகா-ள-ஸ்ரீ ப. நா. சித்தைய செட்டியார்

வேண்டுகோளின்படி

திருப்பத்தூர்

ஹைஸ்கூல், தமிழ்பண்டிதர்

ஸ்ரீமத் சொரூபானந்த சபாவித்வான்

ஆ. ஆர். குமாரசாமி முதலியார்

மாணாக்கரும்

தண்டுலமாநகர் தேவாங்ககுல

திலகரிலொருவராம் மகா-ள-ள-ஸ்ரீ

லா. அ. சித்தைய்ய செட்டி

குமாரருமாகிய

...ய செட்டியாரவர்களால்

...ற்றியது.

---

...ம் பிரஸ், சேலம்.

...அச்சிற்பதிப்பிக்

...1916

உ

சிவமயம்.

# சாற்றுக் கவிகள்.

சேலம், சுகவனம், தமிழ்வித்வான்

## ஸ்ரீமத் சு. அர்த்தநாரீச வர்மா அவர்களால்

பாடியது.

வண்டூருஞ் சோலை மலர்த்தேன் வயற்புகுத
னெண்டூருஞ் செஞ்சாலி நேர்நகர்வா—ழெண்டோளி
பாதங்கட் கின்னிசையிற் பாலசுப்ர மண்யமேவள்
கீதங்கட்செய் தான் கிளர்ந்து.

---

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்ரசுவாமிகளாதீனம்
சேலம் செவ்வாய்ப்பேட்டை
வேதாந்த சித்தாந்த சமரஸ சிவாத்வைத சபையின்
அக்கிராசனாதிபதியாகிய
சுகவனம் ஸ்ரீலஸ்ரீ அழகிரிஸ்வாமிபிள்ளை அவர்களின்
குமாரரும்
ஷண்முகவிலாச அச்சுக்கூடத்தின் சொந்தக்காரருமான
A. சுப்ரமண்ய பிள்ளையால் இயற்றியது.

எண்ணறிய பலவுயிரு மிதயமுணர்ந் துய்வதற்காய்
பிறைவிதன்மேற்
பண்ணறிய பலவிசையாற் பாவிசைத்தான் பகரவொணாப்
பக்தி வாய்ந்தோன்
மண்ணறிய தேவாங்க மரபுதித்தோன் சுப்ரமண்ய
மா தவத்தோன்
கண்ணறிய செய்கைதனை மண்ணாரவும் சாற்றரிது
தன்மைத் தம்பா.

சேலம் செவ்வாய்ப்பேட்டை, சின்னமுத்துத்தெரு
தேவாங்ககுல திலகரிலொருவரும்,
அருட் கவிசிங்கம் என்னும் பட்டம் பெற்ற
ஸ்ரீமத் P.S. திருமலைய புலவரவர்களாலியற்றியது

(1) திருவயங்கு நெடுமாலுந் திசைமுகனும் நான்ம
தேடிக்காணு [றையுங்
உருவயங்கு மதியரவு கொன்றையணி நம்பரம
னுளத்திற்கேற்ப
மருவயங்கு மலர்கொடு நல்லருச்சனை செய்தேவ
வளமையாரும் [லனர்
தருவயங்கு மாமோத நகரிமூந்து ஒன்னலர் பால்
தவிக்கும் நாளில்.

(2) ஆதியென்ற போதுதன தாழியனுப்பிய காத
னறிந் தவ்வாறு.
தீதுதவிர்த்திட நினைந்து திகிரியனுப்பிட வரக்கர்
சிதைவுறாமல்
மாதொருகூ றுடையபர னளித்த வாமதனுல்
வன்மையோடு
நீதமிகு தேவலனைச் சூழ்ந்தனரே யன்னவனும்
நிலைகெட்டானுல்.

(3) அப்பொழுதுதேவாங்க னம்புவியிலபிமான
மளித்த வள்ளல்
முப்பொழுதும் வெண்ணீறு மக்கமணித்தனைத்
முழுமெஞ்ஞானன் தாங்கு
தப்பிதமென் செய்தோமென் றம்பிகையின் சர
தாளையுன்னி ணமலர்
இப்பொழு தென்னிடர் தவிர்க்கவந்திடா யென
யிரைஞ்சு நாளில். வேற்றி

(4) எத்திசையு மெவ்வுலகு மெவ்வுயிரு மேதுதிக்கு
மின்பம் நல்கு
சத்தி சவுடாம்பிகையின் வடிவாகி சீயமதில்
தழைத்துத் தோன்றி
முத்தியெனு மமுதமாய்தேவலனுர் தனையாண்ட
முகில்போல் வாளே.
பத்தியுடன்கீதத்தால் துதிசெய்தான்சுப்பரமண்ய
பாவல்லோனே.

(5) இக்கீதப் பனுவல்களை யியம்பினோரிரு வினையு
மேகு மற்றும்/
பொய்க்கோலப் பிறவியினில் மெய்போதமதனை
பொலிவு தோன்றும். யுணர்
தக்கோல முடனமரர் வாழுமுல கதனிலே
தவத்தராகி.
இக்கனையசவுடநாயகித் திருத்தாள் சேர்வரீ
தியம்பர்ப்பாற்றே.

இஃது.

திருத்துருத்தி இந்திரபீடம் ஈசூர் சச்சிதானந்த
சுவாமிகள் ஆதீனம் சேலம் தண்டுலமாநகர்
வீரசைவாச்சாரிய தேவாங்ககுல திலகரிலொருவராம்
ஸ்ரீமத் சந்திரசேகர சுவாமிகள் மாணக்கர்
ம-ா-ா-ஸ்ரீ K. K. சவுண்டைய்ய செட்டியாலியற்றிய
வெண்பா.

நன்றுவிச் சொன்மலரை நாரன்பு நார்கோத்து
பண்ணுகப் பார்வதிமேற் பாடினன்—நன்றுடு
சேலஞ்சேர் தண்டுநகர் றேவகுல கோத்திரத்து
பாலசுப்ரமண்யன் பணிந்து.

## சுப்ரமண்யர் ஸ்துதி.

இந்திரன் துக்கமர யீசனுதற் கண்பிறந்து
சுந்தர மாங்குகையைத் துளாக்கி—இந்துமுக
தெய்வானை யைமணந்து சென்ஞேனை நாரதன்பின்
வைபதலற யேத்தினேன் பா.

---

மாட்சிமை தங்கிய ஆங்கில அரசர்களால்
அநேக சர்ட்டிபிகேட் பெற்றவரும்
மகா வித்வான்களால்
காரீடி கவிச்சிங்கம் என பட்டம் பெற்றவரும்
அன்னதானப்பட்டி
கி. மு. மே. சி. கோவிந்தம் பிள்ளை
அவர்களால்
இயற்றியது.

கலி விருத்தம்.

மைப்படிந்த மணிமிடற் றண்ணன்
கைப்பிடித்த தண்கார் குழல் சேல்விழி
தப்பிலாச் சவும்ாம்பிகை மேல் கீதம்
சுப்ரமண்யன் றுலக்கிச் சொற்றுணரோ்.

---





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ சௌடேஸ்வரி அம்மன் பஜனை கீர்த்தனை.

வெண்பா.

மண்டமதாய் மாமலைகள் வாரிபோற் சூழ்ந்திருக்கும்
தண்டுலமா நகரில் தானெழுந்த—சண்டிகைமேற்
பாமாலை நன்கியம்ப பக்தியாய் யானைமுகன்
காமத்தை யேத்தினேன் நாடி.

சரஸ்வதி துதி.

கோச்சகக் கலிப்பா.

வண்டூதும்வெறிதண்மா மலர்ச்செழுப்பாயமர்ந்திலகு
வெண்டாம மறைகமலந் தனிலன்பாய் விளங்குகின்ற
பண்டாய வயன்மகளே பரிவுடன்பா லனுக்கருள்வாய்
பண்டாவ மறைபனுவல் பகருஞ்செந் தமிழ்ச்சொலவே.

கட்டளை கலித்துறை.

குரு ஸ்துதி.

புத்தி யெனுமரி யேறி யரிவெனுய் புள்ளமேந்தி
சத்து நிஜ்ருத்தி ராக்ஷந் திருநீருந் தாங்கிமோக
பித்தரி தீர்த்து பிறவிப்பா னன்னீந்தி பேதமிலா
அத்துவி தானந் தளகிரீநாத னடிதொழுவாம்.

தாஜ ராஜ என்ற மெட்டு.

இராகம்-இந்துஸ்தான் தோடி, தாளம்-ரூபகம்.

சாமுண்டீஸ்வரி சவுடாம்பிகை
சரண மடைந்தேனே எந்தன்
தாபாதி மோகங்கள் போக என்மீதினில்
தயவு செய்குவாய்
தாகம தாகவே தாளிணைப் பணிந்தேன்
தனையனைக்கார்த்தாயே
தண்டுல மாநக ரந்தனி லிலகிடுந்
தாயேயருட் புரிவாய்
கண்டுனை பணிந்தேன் கவலையைத் தீர்த்துக்
காப்பாற்றிடுவாயே கா கா சா

இந்துஸ்தான் கமாசு, தாளம் சாப்பு.

தாரதிலார என்ற சந்தம்.

தாயேவருட்புரி தற்பரியே
தயவுசெய் பணிந்தேன் தாளிணையே
நாயேன் மனமது கலங்கி கலங்கி நிதம்
நான் வாடுதல் தகுமோ.
பொல்லாத விருளைப்புகழ்ந்து யானே
கல்லாத மூடனாய்க்களைத்திட்டேனே
நிலையாத தேகமிது நீங்காமுனே
நிலையானவார்த்தை நிகழ்த்துவா யென்றே.
உருகியுருகிமனமலைந்துமலைந்துநின்று
உந்தனைகோறிவந்தனேயின்று
பரிவுகூர்ந்துபதம்தருவாயென்று
பாலன்சுப்ரமண்யன்பாடினேனின்று (தா)

இராகம் இந்துஸ்தான் தோடி, தாளம் ஆதி.

மஜதேத்தோ என்ற மெட்டு

ஆளிமீதிலேறி வந்தாளவேணும் வீரி
வந்தாளவேணும் வீரி உந்தாளிணையை கோரி
காளிரூபிவாராய் மனக்கவலைதன்னையே தீராய்
தேணிலங்குதாராய் என் திரேகமெனுமகம் தீராய்
சுயம்புவான ஜோதி நின் சொரூபமே பிரக்காதி மதி
மயங்குகின்றேன் நீதி உன் மலரடிதருவாயாதி
ராமலிங்கேஸ்வரி என்னை இரக்ஷித்தருளும்வீரி யுனை
நேமமுடன்கோறி யா நினைந்து நின்றேன்மாரி
பாமரன்சுப்பிரமணி யுனை பணிந்தேனேபவானி யுனை
பணிந்தேனேபவானி யென்னைபாதுகாத்தருட்கூனி. ஆ

இராகம் செஞ்சுருட்டி ஆதி தாளம்.

நிற்குநிலை யென்ற மெட்டு.

சத்திசவுடாம்பிகையே உந்தன் மலர் பாதம்
பணிந்தேனே நிதம் பண்புடனே போதம்-நின்
தாஸனைக் காத்துமே தந்தருள்வாய் பிரசாதம்
சித்தர்கட் போற்றிடும் உத்தமியே யென்னைக்காரும்
பவவினைதீரும் அனுதினந்தோறும்-நின்
சித்தமகிழவே நத்தியுரிகினேன் பாரும்.
காளி சொரூபியே கங்குலெனும் மாயைமூடி
காமமதிலோடி கலங்கினேன் வாடி-கொடுங்
காலன் வராமுன்னே காப்பாற்றுவாயென்னை நாடி.
ஆளிமீதிலேறி அன்புடனே இங்குவாராய்
வந்தென்முகம் பாராய் எந்தன் துயர தீராய்-உன்
அன்பன் சுப்ரமண்யன் பாமாலை சூட்டினேன் சீராய்.

இராகம் அபுரூபம், தாளம் ஆதி.

ஆரேசய்யா என்ற மெட்டு.

அம்மா இன்னுந்தாமதமேனோ
அடியேன் றன்னைக் காக்க.

பெம்மான் மகிழ்ந்தனையும் தேவி
பேதையே உந்தனைமேவி
பிரியமுடன் தாவி
திருவடியை தொழுதன்னே
அருள்வரம் சுப்பிரமணி கவி பாடியே. (அம்)

இராகம் பியாகு, தாளம் ஏகம்.

சமதத்தன என்ற மெட்டு.

உந்தனைக்கோறி நின்றேனம்பிகையே
ஊழ்வினையைத் தீர்க்க வாராய் வந்துன் மலரடிதாராய்

மைந்தன்வினைக் கொய்தாளுவா யென்றே
அந்தமுடன்பாலன் வேண்டினே னின்றே
சிந்தை கலங்கினேன் சேயில்லா பிள்ளைபோல்

தொந்தமுறும் வினைபாலே
நொந்தலைந்தேன் புவிமேலே (உந்தனை)

அன்பன் சுப்பரமண்யன் ஏத்தும் சத்திசவு
டாம்பிகை யம்மன் றுளே
தினம் துதிப்பே னென்னுளே (உந்தனை)

இராகம் இந்துஸ்தானி தோடி, தாளம் ஆதி.

ஓதில்லுதாரி என்ற மெட்டு.

நில்லாத தேகமிது நில்லாததேக மிதுவே
அல்லார்ந்த மேனி போல பொல்லாத திரேகமிது-
[நில்லாத திரேகமிதுவே

என்னை மறந்தே யிருப்பது யேனோ
என்னவினை செய்தேனோ (நில்லா)

உன்னை நினைந்தே உரிகினேன் யானே
உந்தனருட்தாராய் (நில்லா)

இராகம் கமாசு, தாளம் ஆதி.

கண்ணாயிரம் படைத்த என்ற மெட்டு.

தாயே உந்தனைநாடி தாவி நின்றேனே பாடி
தயைபுரிந்திடுவாய் தனையனைக்கார்த்திடும் தேவியே
வந்-தெனையா தரித்தருட்-சவுடேஸ்வரியெனு மாவியே

ஈயேனுந்தனைகோறி ஞானமளிக்கவாரி
னயமுடனிப்பொது கயவனைக்கார்த்திட வருவாயே
தினம்-நயந்துனைமேவி உருகிநின்றேனரு டருவாயே

அம்மணி மறுவின்று கேட்பது வரமொன்று
அநுதினமுனையென் மனதிற்கோறி நாடவே
மிகு அழகொடுசெந்தமிழ்க் கவிகளையானும் பாடவே

இராகம் பியாகு, தாளம்-ஆதி.
உடுமலே முத்துசாமி என்ற மெட்டு.

சிம்மவா கனந்தனில் வந்தே—எந்தன்
தீவினைத் தீர்த்தருட் தந்தே—உன்னை
வணங்கி நின்றேன்—என்னை
வந்தாதரித்தருட் தாயே அறிவாயே

பம்பரம்போற் சுழல்கின்றே னிந்த
பாலனைக்கார்க்கவா இன்றே—நின்னைப்
பணியாமலே தினம்
துதியாமலே நின்ற-சேயன்-இந்தப் பேயன்

பந்தபாசயிருள் ஓட்டி அருட்
பரஞான பாதையைக் காட்டி—இனிய
பாதமருள்வாயென்றே—ஆனந்த
முற்றிருந்தேன்—பாலன்—இந்த—சீலன்

தொந்தமுறும் வினையைநீக்கி—மறை
தொந்தசிவென் றயிக்கந்தாக்கி—எந்தன்
துயரைத்தணிப்பாயென்றே—துதிசெய்
துருகிநின்றேன்—வாரும்—வந்து-காரும் (சி)

இராகம் இந்துஸ்தான் பியாகு, அடதாளம்.
மஞ்சுநிகர் என்ற மெட்டு.

எந்தன்மீது கிருபை யில்லையோ
ஏதேதுவாது இப்புவிமீது
என்னைக்கார்க்க வருவதில்லையோ—நின
திணையடியைத்துதி பண்ணியே—தினம்
போதமேமதி லுண்ணியே— வரும்
வழைத்தன்னை பாரும் அன்னையே

ஆதிபரையே நீதிமயமே
இருடியர்கள் துதிசெய் பல்லவி.

பந்தபாசயிருளைப்போக்கியே
பாலனைக்கார்த்து பரிவுகூர்ந்து
பண்புடனே யாளியேறியே—வந்து
பாதந் தன்னை—தாக்கி—எந்தன்
மந்தபுந்தி போக்கி
பக்ஷமுடனறிவைத் தருவாயே
பாமபதி பாதமேதுதி
பண்ணும் பாலனைக் கார்க்க வருவாயே.

மண்டலோர்புகழ்ந் தேத்துமன்னையே
அனுதினமும் உன்னைப்பணியும்
மைந்தனைக் கார்த்திடாய் தன்னையே—பாவி
மாரன் சொரியும் கணையினால்—மட
மாதர்மோக வலையினால்—யான்
மையல்மீறி யழுலு வேனையே
மகிதலத்தில் சண்டாளனென
வண்சொல் வழங்குவதெந்தன் வினையையே

தண்டாமறையாள் வாழும் தண்டுலம்
நகர்வளரும் சண்டிகை மீது
தனியன் சுப்ரமண்யன் பதிகம—செந்
தமிழ்கவி பாடியே செஞ்
சாரமலரடி நாடியே வரும்
தாசன்மீது கருணை கூரியே
சஞ்சிதபாவ துன்பத்தை போக்கி
சஞ்சலந் தீர்த்தருள் நாரியே

ஸ்ரீ சௌடாம்பிகையம்மன் பஜனை கீர்த்தனம்
முற்றிற்று.





ஸ்ரீ சவுடாம்பிகையம்மன் துணை.